உ

மீனாட்சிதுணை.

மதுரை

# மீனாட்சியம்மன்பந்தடி.

திருப்போரூர்

டி. கோபால் நாயகர்

அவர்களாற்றமது

மதறாஸ், என். சி.

கோள்டன் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

17-18 காளத்தியப்ப முதலிவீதி மதறாஸ் என். சி.

1914.

உ

மீனாட்சிதுணை.

# மீனாட்சியம்மன் பந்தடி.

## பாயிரம்.

சத்தியாய்சிவ மாகித்தனிப்பர
முத்தியான முதலைத்துதிசெயச்
சுத்தியாகிய சொற்பொருணல்குவ
சித்தியானைதன் செய்யபொற்பாதமே.

சுரும்புமுரல்கடிமலர்ப்பூங் குழல்போற்றியுத்தரியத்
தொடித்தோள்போற்றி
கரும்புருவச்சிலைபோற்றி கவுணியர்க்குப்பால்சுரந்த
கலசம்போற்றி
இரும்பு மனங்குழைத்தென்னை
யெடுத்தாண்ட வங்கயற்கணெம்பிருட்டி

யரும்புமிளநகைபோற்றி
யாரணநூபுரஞ்சிலம்பு மடிகள்போற்றி
அண்டங்களெல்லா மணுவாகவணுக்களெல்லா
மண்டங்களாகப்பெரிதாய்ச் சிறிதாயினனு
மண்டங்களுள்ளும்புறம் புங்கரியாயினனு
மண்டங்களீன்றுடணையென்ப ரறிந்தநல்லோர்.
செழியர்பிரான்றிருமகளாய்க் கலையயின்றுமுடிபுனைந்து
செங்கோலோச்சி
முழுதுலகுஞ்செயங்கொண்டு திறைகொண்டுநந்திகண
முனைப்போர்சாய்த்துத்
தொழுகணவற்கணிமணமா லிகைசூட்டித்தன்மகுடஞ்
சூட்டிச்செல்வந்
தழைவுறுதன்னரசளித்த பெண்ணரசியடிக்கமலந்
தலைமேல்வைப்பாம்.

பந்தடி.

ஆதியானகடவுளுஞ்சோதி மூலப்பொருளுமாய்
அம்புலிதனை தரித்தவேணி வெம்புலிதனையுரித்தவள்
நீதிமீதிவிடையிலேறி வீதிமதுராபுரிதனில்
நீலகண்டரெனமறுபத்து நாலுபுவனங்கண்டவள்

வாயதுயெட்டெட்டுதிருவிளையாடல் மேதினிதனில்புரிந்தவள்
வளமைபாண்டிநாடுபடைத்த அழகியசொக்கர்மனைவியாள்
கோதிலாசெங்கரும்பைநிகர்த்த கூறும்பசுமொழியினாள் [பாளே.
கொங்கைகுலுங்கவே மீனாட்சிசுந்தரி செங்கையாலொருபந்தடிப்

மேகநாதணக்கூந்தலசைய வாகுசுட்டியசையவே
விச்சித்திரமணிபுனைந்த ரத்னசடையில்லை
நாகமணி மூக்குத்தி சோதிமயமாய்மின்னவே
நவரத்னகுழைகாதில் ஜெகமெச்சயிலங்கவே
ஆகமருவும்பவளவடங்க ளனேகவடங்களசையவே
ஆயிரத்தெட்டுமாத்து மிருந்தசாயலானமரகதந்
தோகைமயில்போலன்னநடையும் வாகுமதுரைச்சியாள்
சுந்தரிமீனாட்சியம்மன் முந்தியிரண்டுபந்தடிப்பாளே. (௨)

வேலைப்பழித்தவிழியினழகும் நீலத்திலகசோதியும்
வில்லைப்பருத்தபுருவங்கண்டு தில்லைவாணனுந்திகைக்கவே
மாலமலரின்மாலையணிந்த சீலமுள்ளபசுங்கிளி
மதுரைக்கோவைகனியைப்பறிக்க கதறிக்கதறிவுருகுதே
சேலைமுகப்பிலிரத்னமணிகள் நாலுதிசையுஞ்சிதறுதே
திங்கள்வதனவேர்வைசிந்த கொங்கைமூன்றுடைதடாதகை

வாலச்சந்திரரூபமான கோலமகனைக்காய்ந்தவள்
　　மதுரைமீனாட்சிசுந்தரி நிதமூன்றுபந்தடிப்பாளே. (௩)

மின்னூலிடையுந்துவளுதே கண்ணேபெண்ணேவயறுகுழையுதே
　　மேகலாபரணதிசோரவும் வாதுவளைகள்தளறுதே
நன்னூல்மிகுந்தமதுராபுரியில் மின்னாட்களைகூடியே
　　நாடிப்பாடிபந்தடிக்கவுந் தேடித்தெருவில்வருவதே
மின்னேமுக்கனிபாலும்சோறு முண்ணவருவாயிப்போ
　　முத்தேபாண்டியராசன்வந்து மெத்தவென்னைக்கோவிப்பாரே
யின்னேரம்பசித்திருக்கலாமோ அன்னேகண்ணே என்செய்வேன்
　　யெங்கள்தங்கைமீனாட்சியம்மை மங்கைநாலுபந்தடிப்பாளே. (௪)

பொறுபொறுதாயேகோவியாதே சிறுபிள்ளையுந்தன்பிள்ளைநான்
　　புதுமையாகப்பந்துமடித்து பதுமையாகவருகிறேன்
பிரியமாகவந்துகூடலில் சிறியமங்கைநங்கைமார்
　　பேடைமயிலதுபோல்விளையாடி வோடிவருகிறார்பாரிதோ
மருகுதோறுஞ்சந்திரன்வந்து தருகிரணங்கள்வீசுதே
　　மாவிலிருந்துகுயில்கள் கூடிகூவுதுநல்லகீதமாய்

குறுகினம்பாடப்பசியுந்தீரும் நொடியில்வருவன்போவென்ருள்
　　கொஞ்சுமொழிமீனாட்சிசுந்தரி வஞ்சிஇந்துபந்தடிப்பாளே (ரு)

மந்த்ரகிரியைச்சிகரவோங்கி அந்திரயிந்திரவிமானமும்
　　வற்ருக்கிணறும்வன்னிமரமும் பொற்ருமரைத்தடாகமும்
அந்தரங்கமுங்கடம்பவனமுஞ் சுந்தரசன்னிதியெழுகடல்
　　ஆணிமுத்துகள்ளந்தகோபுரந் தோணிநாலுவாசலும்
வந்துரம்பைகள்கொண்டானடிக்குஞ் சுந்தரப்புதுமண்டபம்
　　வருங்கல்லானைகரும்புதின்றதும் வலிமையுள்ளராபதம்
முந்திசாபந்தீர்த்தமதுரை கந்தசுவாமியையீன்றதாய்
　　முதுலைகமீனாட்சியம்மன் சுதியாயாறுபந்தடிப்பாளே. (சு)

எங்குமதிக்குமேன்மையான சங்கைபலகைமீதினி
　　லிருக்குநாற்பத்தெட்டுபேருடன் ரனுநாற்பத்தொன்பதாம்
மெங்குநிறைந்தகற்பூரசொக்கர் சங்கத்தாரிலொருவராம்
　　மீனச்சமணர்படித்தமந்திரம் ஞானபூதிவைகையாறினில்
பொங்கிவருந்திதன்னிற்போட போய்மறந்ததுகடல்தீரம்
　　புண்ணியசம்பந்தர்வாசக மெதிர்த்துபோனதிருவேடகம்

மங்கையர்க்கரசிக்கருணைபுரிந்தவளர் சம்பந்தற்குபாலீன்ற
மதுரைநகர்மீனாம்பிகைத்தா யேழுபந்தடிப்பாளே. (எ)

மேன்மைபெருகும்பாண்டியென்பது நாலுகோடிதிரவிய
விலக்கிமாணிக்கவாசகரிடத்தில் விளங்குகுதிரைவாங்கவே
தானைமீறும்நரியைப்பரியா கோலஞ்சமைத்தகாரணஞ்
சட்டமாகவாணிச்சிகையிற் பிட்டுவாங்கிதின்றவர்
ஆலகாலவமுதுகொண்ட நீலகண்டசுந்தரர்
அங்கைமீதுமான்மழுவுடன் துங்கபவனிவந்தவர்
சூலமோடுகபாலமேந்தி வாலமதனைக்காய்ந்தவள்
சொக்கர்பங்கிலுறைமீனாட்சி யெக்கியெட்டுபந்தடிப்பாளே. (அ)

கலைமடந்தையோர்பந்தடித்தனள் குலமடைந்தயர்தடுத்தனள்
நிலமடந்தையோர்பந்தடித்தனள் மலைமடந்தையும்தடுத்தனள்
நலமிகும்பந்தையெடுத்து லட்சுமிபலம்பொருந்தியடிக்கதவரிற்று
மங்கைமீன்வல்லிகண்டு அங்கங்குலுங்கநகைத்தனள்
புலவர்மடந்தைநாணங்கொண்டு மலைமகளைபணிந்தனள்
பிஞ்சிரிப்பாலன்னைமகிழ்ந்து வஞ்சியைப்புல்லிதழுவினள்

வலமிடமுஞ்சாரிவந்து நிலவில்பந்தெடுத்ததை
மலையத்துவசன்மகள்மீனாட்சி யொன்பதுபந்தடிப்பாளே. (௯)

விண்ணவருடன்பாண்டிமன்னவர் கண்ணெதிர்வந்துபோற்றவே
வேழமுகனுமாறுமுகனுந் தாளைவணங்கிப்பணியவே
விண்ணுயர்சோலைமலைவாளழகர் கண்ணெதிர்வந்துபார்க்கவே
மீனலோசனிபந்தடிப்பதை வானவர்போற்றிவாழ்த்தவே
பெண்ணரசியுந்தன்மடந்தையுங் கலைமடந்தைபந்தடிப்பதை
பேறுபெற்றமலையழகர் கூறிதங்கையைவாழ்த்தினார்
தன்னிகரிலாமும்முலைத்தாடகை வண்ணப்பந்தடிப்பதை
சங்கரன்கண்டுமகிழப்பத்து பந்தெடுத்து அடிப்பாளே (௰)

மதுரை மீனாட்சியம்மை பந்தடி

முற்றித்று.

---